22nd August 1961]

the hon. Member may perhaps be aware that the Government are taking steps to publish their own text-books and I hope that would set the standard for the publication of text-books by private publishers also when they have got to publish books.

### *Basic Training College, Orathanad*

* **1335** *Q.*—Sri A. VEDARATHNAM : கனம் நிதி அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதில் அளிப்பாரா—

(அ) ஒரத்தநாட்டிலிருக்கும் ஆதாரப் பயிற்சிக் கல்லூரியில் பயில வரும் பெண்களுக்குத் தனி ஹாஸ்டல் கட்ட உத்தேசமுண்டா ?

(இ) அதன் விவரமென்ன ?

(உ) இப்போது அங்கு எத்தனை பெண் பட்டதாரிகள் பயிற்சி பெறுகின்றனர் ?

(எ) அவர்களுக்குத் தனி வசதி என்ன அளிக்கப்பட்டிருக்கிறது ?

The Hon. Sri C. SUBRAMANIAM : (அ) No, Sir.

(இ) Does not arise.

(உ) None.

(எ) Does not arise.

Sri A. VEDARATHNAM : இந்த மாநிலத்திலே இந்த ஒரு ஆதாரப் பயிற்சிக் கல்லூரிதான் இருக்கிறது. பெண்கள் பயிற்சி பெறுவதற்கு தனி வசதி ஒன்றும் இல்லை. இப்பொழுது ஹைஸ்கூல்களில் எல்லாம் ரொம்ப பெண்கள் படிக்கின்ற காரணத்தினால், அவர்களுக்கு எல்லாம், அதாவது ட்ரெயினிங் ஸ்கூல்களுக்குப் போக விரும்புகிறவர்களுக்கு மறு பயிற்சி அளிக்க வேண்டியிருக்கிறது. அதற்கான வசதியில்லாத காரணத்தினால் இதை அரசாங்கம் கவனித்து, வேண்டிய வசதிகள் செய்து கொடுக்க முன் வருவார்களா ?

The Hon. Sri C. SUBRAMANIAM : பெண் மாணவிகளை இதிலே சேர்ப்பதற்கு யூனிவர்ஸிடியிடமிருந்து அனுமதியில்லை. அவர்கள் செய்துள்ள முடிவு சரியான முடிவு என்றே தோன்றுகிறது. பெண்களுக்கு இந்த மாதிரி இன்னொரு கல்லூரி ஆரம்பிப்பதுதான் சரி. அதைப் பற்றி ஆலோசித்துப் பின்னர் முடிவு செய்ய வேண்டியதாக இருக்கும். உடனடியாக இது பரிசீலனையில் இல்லை.

Sri A. VEDARATHNAM : பெண்களுக்கென்று தனிக் கல்லூரி ஆரம்பிப்பதற்கு அரசாங்கத்திற்கு உத்தேசமுண்டா ?

The Hon. Sri C. SUBRAMANIAM : உடனடியாக ஆரம்பிப்பதற்கு உத்தேசமில்லையென்று சொன்னேன். இதைப் பற்றிக் கொஞ்சம் தாமதித்துத்தான் யோசிக்க வேண்டியிருக்கும். மற்ற துறைகளிலே இப்பொழுது அதிகக் கவனம் செலுத்த வேண்டியிருக்கிறது.

### *Clerks in Judicial Department*

* 1336 *Q.*—Sri V. K. KOTHANDARAMAN : Will the Hon. the Minister for Home be pleased to state whether the Government have given effect to the recommendations of the Madras Pay Commission for upgrading clerks in the Judicial Department?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : Not yet, Sir. The matter is under the Government's consideration.